உ

முருகன் றுணை

# சிவகிரிக்கூடாரப்பாறை

# வாலசுப்பிரமணியக்கடவுள்.

# தோத்திரப்பா

இது.

ஸ்ரீமத் முருகதாசசுவாமிகள்மாணாக்கருளொருவரும்
ஊற்றுமலைச் சமஸ்தான வித்துவான் களிலொருவரும்
ஆகிய
சிவகிரிஜமீன் கோட்டையூர்
**சு. கந்தசாமிப்புலவரால்**

இயற்றப்பெற்று.

ஷை சிவகிரி வீ. சண்முகத்தேவரவர்கள்
விருப்பத்தின்படி
சம்பிரதிசிவசுப்பிரமணியபிள்ளையவர்கள்
குமாரரும்ஷையூர்சேர்மெனும் கிராமமுனிசீபும்
ஆகிய ஸ்ரீமாந் சர்க்கரையப்பபிள்ளை யவர்களால்

தென்காசி.
...தி விலாசம்பிரஸில்
...ப்பிடப்பெற்றது
1915.

உ

முருகன்றுணை

சிவகிரிக்கூடாரப்பாறை

வாலசுப்பிரமணியக்கடவுள்.

# தோத்திரப்பா

இது.

ஸ்ரீமத் முருகதாசசுவாமிகள்மாணாக்கருளொருவரும்
ஊற்றுமலைச் சமஸ்தான வித்துவான் களிலொருவரும்
ஆகிய
சிவகிரிஜமீன் கோட்டையூர்

சு. கந்தசாமிப்புலவரால்

இயற்றப்பெற்று.

ஷை சிவகிரி வீ. சண்முகத்தேவரவர்கள்
விருப்பத்தின்படி

சம்பிரதிசிவசுப்பிரமணியபிள்ளையவர்கள்
குமாரரும்ஷையூர்சேர்மெனும் கிராமமுனிசீபும்
ஆகிய ஸ்ரீமாந் சர்க்கரையய்யபிள்ளை யவர்களால்

தென்காசி.

கோமதிவிலாசம்பிரஸில்
பதிப்பிடப்பெற்றது

1915

# முகவுரை

கடல் சூழ்ந்த நெடியவுலகத்தின்கண் குமரக்கடவுளைத் தொழுவோரே கௌமாரரென்பர் அக்கடவுளை வழிபடுதற்குரிய சமயமே கௌமாரமெனப்படும்.

அக்கௌமார சமயிகளுக்குரிய லக்ஷணங்களாவன! கௌமார தீக்ஷைபெறுதல் சந்தியாவந்தனை, சடாக்ஷர ஜெபம், தியானம் தோத்திர பாராயணம், கந்தபுராண முதலியபுனித நூற்களை கற்றல், கேட்டல் சிந்தித்தல் ஆகிய சற்கருமங்களை நாடோறு, நியமமாகச் சிறிதுபொழுதேனும் அனுட்டித்து வருதலேயாம்

அப்பெருமானது பெரும் பெருமையை திருப்புகழ் திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தர்கலிவெண்பா. சஷ்டிகவசம் திருமுருகாற்றுப்படை முதலிய திவ்விய அருட்பாடல்களால் உலகமுய்யும் பொருட்டு நம் ஆன்றோர்கள் விளக்கிவைத்திருப்பதற்கிணங்க கலிமிகுந்த இக்காலத்தும் எம்மனோருய்யவேண்டுமெனும் அவாவால் இயாவரும் எளிதினுணர்ந்து நாத்திறத்தினராய்த் தோத்திரம் புரிவான் இனிய செந்தமிழ் வாக்கியாம் இந்நூலாக்கியோர் பரமகருணைநிதியாம் இவ்வாலசுப்பிரமணியப் பெருமான்மீது பன்னிரு ஆசிரியவிருத்தங்களானும் பன்னிரு சந்தக்கவிகளானும் மேம்பாடெய்திய கந்தபுராணச்சரிதக் கருத்தினைத்தழுவிச் சொன்னயம் பொருணயம் விளங்கச் சங்கிரகமாயமைத்திருப்பதுபற்றி இஃதை பிரதிதினமுமன்புடன் பராயணஞ்செய்பவர்கள் அக்கந்தபுராணமனைத்தையுங் கேட்டுணர்ந்த பலபயனை யெளிதிலடைவார்களென்பது திண்ணமாம்.

ஆகவே பக்தபுண்ணிய சனங்களி யாவரும் இதைப்பத்தியோடு கற்று இகபர லாபத்தைப் பெற்றுய்யுமாறு அக்குகப் பெருமானைத்திரிகரண சுத்தியோடுசதாவம் பிரார்த்திக்கின்றனன்

இங்ஙனம்

A. T. இராமலிங்கம் பிள்ளை.

தலைவன் கோட்டை எஸ்டேட் ரிசிவர்.

சாற்றுக்கவிகள்

## சிவகிரி ஸ்ரீமத்மணிமுத்து ஓதுவாரவர்கள் இயற்றியது

சேலார் வயல் சூழ்சிவகிரியிற் சிறந்த குமரகுருபரன்மேற்
பாலா ரினிய கண்டெனவே பகரா சிரியஞ்சந்தப்பா
நூலார்புலவ ரெலாம்புகழ நுவன்றான் கந்தசாமி யெனுஞ்
சாலார் கவிநாவலன்பெருமை சாற்றவெவர்க்கு மரிதாமே

## ஷெ ஓதுவாரவர்கள் மாணுக்கர் வீ. சண்முகத்தேவரவர்கள். இயற்றியது.

உலகுபுகழிருகமலைக் காலையமாயவனியெனுமுயர்மாதுக்கோர்
திலகமெனவிளங்குசிவகிரிக் கண்வளர் முருகனுக்குத் திகழ்பா
[மாலை
யிலகுதமிழ் மூன்றினுயர் கந்தசுவாமிப் புலவனியல்பாச்சூட்ட
நலபலநா லுணர்ந் தமிழ்க்கோர்நல்லமுதமிதுவெனவேநவின்றார்
[மன்னே.

## அ. மகாலிங்கக்கவிராயரவர்கள் இயற்றியது

நற்பதிகந் தக்கமலமானருள்சேர்சிவகிரிவாழ்நாதன்வேண்மேற்
பொற்பதிகந் தருகோட்டையூர்க்கந்தசாமிவலன்புலவர்மெச்சச்
சொற்பதிகந்தனிச்சந்தப் பாப்பகர்ந்தா னிவைகளிரு சுவைக
[டேர்ந்து
கற்பதிகந் தனிலேற்ற மெனக் கசிந்து தினந்துதிப்பக் கருதா
[ரியாரே,

தென்காசி சாமிசந்நிதித் தெரு

## ச. மாடசாமிப்பண்டாரம் அவர்கள் இயற்றியது

கூடாரப் பாறைக் குகன்பொற் கழலிணையிற்
றேடாரப் பாத்தொடையற் சூடினான்—பீடசலச்
சந்தமுனி சந்தமுநீ தானெனவே வாணர்புகழ்
கந்தசுவா மிக்கவிஞன் காண்

உ

முருகன்றுணை

சிவகிரிக் கூடாரப்பாறை

வாலசுப்பிரமணியக்கடவுள்.

# தோத்திரப்பா.

## காப்பு

### வெண்பா.

திங்கள்வத னத்திருவாழ் செல்வச் சிவகிரியின்
மங்களகூ டார வரைக்குகன்மே லிங்கிதமே
யுந்து பனுவ லுரைக்கத் துணைவருமே
சந்தி விநாயகன்பொற் ருள்.

### குற்றாலலிங்க சித்தமூர்த்தி வணக்கம்

கூடாரப் பாறைக் குமரன்மலர்த் தாட்கணியாய்ச்
சூடாமற் சூடுமியற் றெங்கல் சொலத்—தேடாமற்
குற்றால லிங்க குருநாத வெந்நாவிற்
பற்றாக நின்றருட்கண் பார்.

### ஆசிரியவிருத்தங்கள்,

பூமேவு செங்கதிர்க ளோரா றுதித்தெனப்
பொலியுமணி மகுடங்களும்
பொங்கொளித தும்பகள சந்த்ரவதனங் களும்
பூதியணி சோதி நுதலும்

காமேவு கருணைபொழி யீராறு விழிகளுங்
கனமறைகள் கமழ்குறு நகைக்
கனிவாயு மணிமகர குண்டலந் தோய்செங்
கடப்பணி தடந்தோள் களும்
பாமேவு மார்பின்முந் நூலும்வடி வேலுடன்
பன்னிருகை யுங்கிண் கிணிப்
பதமுந்து லங்கமயின் மிசைவந்து வந்துகண்
பார்த்தருள் செயெந்த நாளுங்
கோமேவு மலர்மாதர் குடிகொண்ட சிவகிரிக்
கூடார வரையின் மிசைவாழ்
குமரகுரு பரமேச வடியரிரு தயவாச
குகவரத முருகேசனே (க)

சிந்தை மகிழ் செல்வமும் புந்திமலி மைந்தருந்
தெள்ளறி வுடன் பொறுமையுந்
தீதற்ற சீலமொடு நோயற்ற வாழ்வு நற்
சீவகா ருணிய நலமுஞ்
சந்ததநி னைந்துருக னன்பாறு வுஞ்செழிய
தண்டமிழு நின்கிண் கிணித்
தாளைமற வாதுருகு நேயதிட வாழ்வுந்
தழைத் தோங்க வருள்செயெந்தாய்
கந்தமலி கொன்றைபுனை நம்பனுதல் வெங்கண்வழி
கதிராறு பொறியு ருவமாய்க்
கழலணி சிலம்பினவ மணியுதிர வெருவியுமை
கடிதோடி வந்து நித்தோய்

கொந்தணிசி வக்கொழுந் தேபுகழ்ச் சிவகிரிக்
கூடார வரையின் மிசைவா ழ்
குமாரகுரு பாநேச வடியரிரு தயவாச
குகவரத முருகேசனே (௨)

சலத்திரை யொலிக்குமெழு கடலினும் பெரிதான
சன்னவெழு கடல் கடந்து
தக்கவொருமுத்தியெனு மற்புதக் கரையேறு
தற்குனது தாட்புணையலா
திலக்கிலை யெனக்கலை யுரைப்பதைப் பெரியோ
ரிசைப்பதைக் கேட்டிருந்து
மெட்டுணையு நின்பத நினைத்திடாப் பேதையே
னென்றுனக்காளாவனோ
சொலற்கரும் வளைத்தாள மிரவுபக லறியாது
சுடர்சரவணப்பொய் கையிற்
சுடுதீக மேந்தித் தாக்கங்கை யேற்றிட்ட
சுயஞான சோதிமணியே
குலத்தரசர் செங்கோல் செலுத்தி வளர்சிவகிரிக்
கூடார வரையின்மிசைவாழ்
குமாரகுருபரநேச வடியரிரு தயவாச
குகவரத முருகேசனே (௩)

மூர்த்திகளை நேரிலே பார்த்தறிந் தோமெனவு
மோன சிவயோக நிலையோ
முப்புவொடுவாதமோ யாவுமறி வோமென
மொழிந்துபுலி யம்பசுத்தோல்

போர்த்திய தெனத்திரியு மூர்க்கர்பாற் கனவினும்
போந்திடா துன்னை மறவாப்
புண்ணியமெ யடியவரை நண்ணியவர் பணிசெயப்
புரிவாயிலங்கு மாறு
கார்த்திகைப் பெண்களமு தூட்டிடவளர்ந்துமை
கரத்தினுன் மேனியொன்றாய்க்
கவின்முகமொ ராறுயணைத்தெடுத் தீசனேடு
கனிமுத்த மிட்டமுத்தே
கூர்த்தநுதியயில் வீரர்கீர்த்திமலி சிவகிரிக்
கூடார வரையின் மிசைவாழ்
குமரகுரு பரனேச வடியரிரு தயவாச
குகவாத முருகேசனே (ச)

அண்டருக் கரிதாய்க் குறுந்தினை வனத்துக்
கனித்தெளிமையாய்நின் றநி
னருணசெந்தாமரையை மலரா லருச்சனைசெய்
தாறெழுத் தைச்செபித்துத்
தொண்டொடுதி யானித்து நெஞ்சுநெக்குருகித்
துதித்துநாக் குழறிவிழிநீர்
சொரிந்துரோமஞ்சிலிர்த் துடல்பணிப் பத்தொழுந்
தூயமெய்ப் பேறுதவி யாள்
தண்டையணி கிண்கிணி சிலம்பவரன் மார்பகந்
தனிலாடு முபயசரணு
தனியமர ரொடுசமர விளையாடல் செய்தசெய
தாவால சுப்ரமணியா

கொண்டனிகர் கொடையாளர் தங்கிவளர் சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமாரகுருபர னேசவடியாரிரு தயவாச
குகவரத முருகேசனே (ரு)

தாதைதாய் பந்துசனமனைவிசே யிவரெலாஞ்
சந்தையிற்கூட்ட மென்றுந்
தனதான்ய சம்பத்து முகின்மின்ன லென்றுஞ்
சரீரநீர்க் குமிழி யென்றும்
நாதநீ யழிவில்பொரு ளென்றுமுனை நாடாது
நாடலேமுத்தியென்று
நண்குணர வைத்தாய வாறனு பவித்திடவு
நன்கருள்செ யையநுந்தை
வாதைபுரி சூரனை வதைத்துவா வெனவுமை.
வழங்கயிலுடன் றுணைவராம்
வயவரொடு சென்றுவரை யைத்தாருகனைவென்று
வளர்செந்தில் வந்தவரசே.
கோதையர்க ளாடல்புரி மேடைமலி சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமாரகுரு பரநேசவடியாரிரு தயவாச
குகவரத முருகேசனே (சா)

தலமெங்க ணுஞ்சென் றறங்கள்பல செய்துதரி
சனநேம மோடு செயினுந்
தண்ணறிய கங்கைமுத லெண்ணினதி யாடினுஞ்
சந்ததம் பூசை செயினு

மிலகுனது திருவடியை நினைதோறு நினைதோறு
மிதயநெக்குருகி யோலிட்
டிருவிழியி னீரருவி காட்டுமன் பிலேயே
வியாதுபயனுகு மெந்தாய்
வலவீர வாகுவைத் தூதனுப் பிச்சென்று
வந்தபின் சென்றுவீர
மகேந்திர புரிக்கருகில் வீரரொடு பாசறையில்
வர்மித்திருந்த வீரா
குலமலிகுபேரபட்டின மனைய சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமரகுரு பரநேச வடியரிரு தயவாச
குகவாத முருகேசனே (எ)

அயில்விழி மடந்தையர்கண் மயலிடைவிழுந்துள
மழிந்துற்றநாளையெல்லா
மாற்றிற் கரைத்தபுளி யாக்கித் தொலைத்தவி
ணற்பனேன் சொற்பனத்தும்
பொயிலறிவி னர்ச்சேர்கி லேன்றயையி லேன்றினைப்
போதுமுனையேத்து கில்லேன்
பொன்செய்நின தடிமலர்க் கெங்ஙனு ளாகுவேன்
புரைதவிர்த் தினியாளுவாய்
செயிர்பாநு கோபன்மூ வாயிரவர் முதலாய
சேரலரை வீரவாகு
தேவர்கண வீரராற் கண்டதுண் டஞ்செயச்
செய்தரண சூரதீரா

குயில்பாட மயிலாடும் விரிபொழிற் சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமாரகுரு பரநேச வடியரிரு தயவாச
குகவாதமுருகேசனே (அ)

எளியேன் படுந்துய ரெடுத்தெடுத் தோதிபு
மிரங்கிலா யிதுவரையிலுன்
னீராறு காதுகளி லோர்காதிலேனுமோ
ரெள்ளளவு கேட்கவிலையோ
வளிபுரியு மன்பர்கட் கருள்பரா முகமோவு
னன்பிலேன் மேல்வர்மமோ
வடியவர்க் கெளியனு கியநீயென் மட்டுக்கு
மருளாதிருத்த லழகோ
வொளிர்மணி முடிச்சிங்க முகனுயிரந்தலையி
லொன்றொழிய வெற்றிடுந்தோ
றுதிக்கவுங் காரத்தடக்கி மார்பூடுருவ
வொருகுலிச முய்த்தவிசயா
குளிர்கன்னல் செங்நெல்மலி கழனிசூழ் சிவகிரிக்
கூடார வரையின் மிசைவாழ்
குமாரகுரு பரநேச வடியரிரு தயவாச
குகவரத முருகேசனே (கூ)

ஆறுமுகனடிமையென நாயேனை யுலகெலா
மறியுமா றருள்வையேலு
னையன்பதத்தாலு நின்றம்பி நனிவரைந்
தன்றுய்த்த கணையிணாலு

முறைபட்டுயர்வுகெட் டயரியமன னுகிடா
னுன்கரக் குட்டுண்ட முன்
னொருமுகன் பண்டையான் பிறப்பிறப் பிலனுவ
னுனது திருவருளெவிதமோ
சிறிவரு சூருடலே வேல்கொடு பிளக்கமயில்
சேவலாய் வரவூர் தியாய்ச்
செய்யகொடி யாய்க்கொண்டு விண்ணவர்கடுயர்
தெய்வமே சைவமணியே [தீர்த்த
கூறுதமிழ் வாணரிசை வாணர்மலி சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமரகுருபரநேச வடியரிரு தயவாச
குகவரதமுருகேசனே (௵)
கிளர்தமிழ்க் குருகியயி லால்வரை பொடித்தூநக்
கீரனைக்காக்க விலையோ
கெஞ்சிமுருகாவெனுமொர்மங்கைக்கு வெட்டுண்டு
கெட்டகாநல்கவிலையோ
வளவில்சிக ரியில்வீழ மருணகிரி யைத்தாங்கி
யாண்டுனரு ணல்கவிலையோ
வனுதினமு முனதடியை மறவாதிருக்க வெனை
யாளுவது னக்கருமையோ
வளர்மக பதிக்குவா னுலகவரசாட்சியை
வழங்கியன் னேண்புதல்வியை
மங்களதிருப்பரங் குன்றமெய்ப் பதியிடை
மணஞ்செய்த குமராபசுங்
குளகுண்மத கரிபரியு லவுமெழிற் சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்

குமாரகுருபரனேச வடியரிரு தயவாச
குகவரதமுருகேசனே (௰௧)

மோகமெனும் வாருதி யினலைகளா லெற்றுண்டு
முட்டுண்ட லைந்திடாது
முன்னைவினை தொடராது மெய்யிலெப்பிணியேனு
மூண்டிடா தொக்கலோடுண்
காகாதியர் கோள்களணுகிடா தியமனுங்
கருதிடா துனதுதண்டைக்
கழலன்றிவேறெனு தெனையாள்வதுன்கடமை
கைவிடேல் யாழ்முனிசொலப்
பாகுறழ் மொழிக்குறமின் மால்கொடுளில் வேடனுப்
பரணடியினின்று கெஞ்சிப்
படர்கணி விருத்தனு கித்தனிவ சஞ்செய்து
பகர்மணஞ் செய்தகுமரா
கோகனக வாவியகனேரிசூழ் சிவகிரிக்
கூடாரவரையின் மிசைவாழ்
குமாரகுருபரனேச வடியரிரு தயவாச
குகவரத முருகேசனே (௰௨)



# முற்றிற்று

காப்பு

நேரிசை வெண்பா

தோடாரத் தேறற் றுளிதுளித்துச் சூழ்சோலைக்
கூடாரப் பாறைக் குமரனுக்குத் தேடாமற்
சந்தக் கவிதைசொலத் தஞ்சத்துணை கருணைச்
சந்திக் கணபதி பொற்றாள்

## வண்ணக் கவிகள்

குழிப்பு

தனன தன தந்த தந்த தன தான

புயல் வணமுகுந்தனந்தன் மருகசமரங்கடந்த
புயமொர் பனிரண்டடர்ந்த செயவீரா
பொழியருள் சுரந்திலங்கும்விழிகள் பனிரண்டுகொண்ட
பொருவில்குககந்த செந்தில் வளர்நாதா
வயதிடதுரங்கவென்று துதிபல நிதஞ்செய்தங்கி
யடுநெயின் மனங்கரைந்துன் மறைகாண
வணிகிளர் சிலம்புதண்டை புனைசரணபங்கயங்க
ளனுதினம் வணங்குமன்பு தருவாயே

முயல்வனமடந்தைகந்த நறியகளபந்திமிர்ந்த
முலைமுகடு மூந்தொறும்ப ணளியோடே
முகையினநெரிந்துடைந்து நறவொழுகு செங்கடம்பின்
முறியணி கிடந்திலங்கு மணிமார்பா
செயவிசயனென்ற தொண்டன்வளைவிலடியின்றழும்பர்
செவியிலொரு மந்திரஞ்சொ லியவாயா
செகமுழுமையும் புகழ்ந்து மகிழ்பலவளம் பொலிந்த
சிவகிரியில் வந்த வெங்கள் குகவேளே (க)

தனன தந்த தந்தத் தனத்த தன தானு

கமகமென்கமஞ்சட்குளித்து முகமினுங்கநெஞ்சிற்புடை
கனதனங்குலுங்கச் சிரித்து மயல்போலே [த்த
கனிவுடன்சிணுங்கிப்பசப்பிவெகுபணம்பிடுங்கித்துறத்து
கபடமிஞ்சு வண்டப்புறட்டு விலைமானார்

அமளியின்க ணென்றிப்படுத்து வெகுவிதம்புணர்ந்திச்
வவர்தரும்புலின்பப்பெருக்கி லமிழாதே [சைமுற்ற
யமலநின்றனம் பொற்பதத்தை நினைதொறும் பல்கின்பப்
லமிழுமன்பை யின்றைக்களித்த ருளுவாயே [பெருக்கி

சமனடுங்கவன்றைக்குதைத்த கழலர்தந்த கந்தப்பமிக்க
தடைபுரிந்த குன்றைப்பொடித்த வடிவேலா
சகலவும்பருஞ்சித்தமுட்கியடிபணிந்துகெஞ்சப்புடைத்த
தகுவரென்ற வட்புற்ற துட்டர் குலகாலா

மமதையின்றிநண்புற்றபத்தியொடுவணங்குமன்பர்க்கிடு
வரின்விரைந்திரங்கிப்புரக்கு மியலோனே[க்கண்
வளமலிந்தநன்செய்த்தடத்தில் வளைமுழங்குமின்பப்புக
வகிரியின்க ணன்பர்க்கருட்செய் குகவேளே [ழ்ச்சி(2)

தனதனத் தனதனத் தன தானு

இருநிலத்தவரவர்க்குளவினைப்பயனுடைத்
தெனநினைத்தொருவரைப் பழியாதே
யிதயநெக்குருகி நிற்பணியுமுத்தமகுணத்
தியல்பு மிக்குடையவரைப் பிரியாதே

கருவினுற் றெழுபவக்கடலலைத் தெறிதுயர்க்
கடலிடைத்தினமு மெய்த் துழலாதே
கனதனக்குறமகட் குருகிமுற்செலு மலர்க்
கழலிணைப் புணையெனக் கருள்வாயே
யொருமருப்பினை யொடித் தமரினிற்கயமுகத்
தொருவனைத் தெறுமவர்க் கிளையோனே
யுளமதிற் பகையுமற்றுறவுமற் றசைவறுத்
தொருகுறிப்புறு மவர்க் கெளியோனே
பொருகயற் றுணைவிழித் துவரிதழ்ச் சிறுமுலைப்
புனைகுழற்சசி மகட் கிசைநாதா
பொதுளனத் துயில்கெடத்தொனிசெய்நற் குடவளைப்
புனல் வளச்சிவகிரிக் குகவேளே (௩)

தந்தனதனத் தந்தன தனதன தன தான

மண்டுமாநிதி யுண்டெனின் முறைசொலி
யின்பமாய் மொழிவிண்டுள மயல்புரி
வஞ்சமேமலிய நெஞ்சினர் பொருளிலை யெனிலோபோ
வம்பனேயட வெங்கனே நடநட
வென்று கூறுமி டும்பிகள் சொறிவுசெய்
வங்குகூலை கிரந்தி புணுதவவ ருறவாமோ
கண்டுநேர்தருசெந்தமிழ் முதிர்சுவை
கொஞ்சமேனு மறிந்திலர் வடியிடு
கஞ்சலோபர் மகிழ்ந்திடும்வகை சொலி யலைவேனோ
கங்குல்போல்வரு பந்தமு மலமற
வென்றுனது சிலம்பணியிருபத
கஞ்சமேகதி யென்றுநகவர்பணி யருள்வாயே

பண்டனுருயிர் கொண்டவள்பரைசிவை
யம்பைவாலை திகம்பரி மலைமகள்
பண்செயாரணி சண்டிகையுமையவ ளருள்பாலா

பண்டொர்பாவலன் வெண்கவி வினவிட
வெங்கண்வேடனெனும்படி சுடுகனல்
பம்புபாலை வனந்தனினசையொடு படர்தாளா

வெண்டிசாமுக மண்டல முழுமையும்
வென்றியாடல் புரிந்துயர்மதுரைபி
லின்பமாயரசன்றுசெய் வழுதியர் பெருமானே

யிஞ்சிவாழைகரும்பு நென்முதிரவி
ளைந்தெநாளும்வளம் பொலிசிவகிரி
யென்றமாநகரந்தனின் மருவிய குகவேளே (ச)

தானனந் தனனதன தனதனத் தனனதன தனதானு

தானமுந் தவமுமொரு சிறுவனுத் துணைபுரியன்
வாசியின் கலையமைசெய் சுழிமுனைக் குறியினொடு
சாதனம் புரியுநல வழியினட் பொடுபழகி யறியேனே

தானெனும் புலனையறி பொருவிலத் துவிதசுய
மோனவிங் கிதநிலையி லெறிகடற் றிரையையிகர்
தாழ்மனந்தறியதெனவசைவறப்புரியுநெறி தெரியேனே

யூனிணங் குருதிகுடர் மலமிகச் சொரியுடலை
நானெனுஞ் சிறுமதிய னெனதெனப் பலபொருளை
யோடுமைம் புலவழியின் மயன்மிகுத் துழல்கொடிய
[னினைவோடே

யோய்விலன் புடனிதமு மிதயநெக் குருகுமுயர்
வானமீதாண் டினர்பெறுநி னிணையடிக் கினியெவித
மோர்தொழும் பெனவடைவ னினதருட் கடைவிழிகொ
[டருள்வாயே

யேனமன் றறிவரிய சரணருக் கிசைகவுரி
மாசவுந் தரியலக ரியினியற் குளமுருகி
யேயனம்பரிவிஙெருகவிஞனுக்கிடுமிறைவி யருள்பாலா

வீறில்வெண் குடவளைக ளொலிநடுக் கடலிலெழு
மாமரம் பிளவுபட வடிகதிர்த் திடவயிலே
யேவியந் தார்முனிவர் துயர்தவிர்த் துவகையருள்
[செயவீரா

மானினம் புகழ்நயனி சனகியைக் கொடுசிறையி
லேயிடுந் தசமுகனை நொடியினிற் கணைசடவி
மார்பகந் துளைகள்பட வெலும்விறற் சிலையன்மகிழ்
[மருகோனே

வானிலந் தருவையறி குவமெனக் கருதிவிணி
லேகுறுந் தகைமையென வளர்பொழிற் றுணர்மலரின்
வாசமெங்கணுமுலவுசிவகிரிப்பதியில்வளர்குகவேளே(டு

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன தனத்ததான

அடிக்கடி சிரிப்பொடு பசப்பிடுமொ ழிச்சிக
ளிடைக்கிடை சவிக்கையை நெகிழ்த்திடுமுலைச்சிக
ளடுத்தவர்மனத்தையு மிழுத்திடும்விழிச்சிகள்
[வரத்து ளோரை

யகத்தினு ளொருத்தரை யரக்கிடை யொருத்தரை
முடுக்கிடை யொருத்தரை யிடுக்கிடையொருத்தரை
யமைத்தவரவர்க்கக மகிழ்ச்சிசெய் சமர்த்திகண்
மயற்பசாசே
பிடித்துளபணத்தையு மழித்தவர் கொடுத்திடு
கடுப்பதிரணத்துட னிடுப்பரிவுளைச்சல்கள்
பிணித்திடவிடர்ப்படும் வசைக்குணவசத்தனை
யடுத்திடாதே
பிணக்கறுமனத்தின ரெணிக்கையிலறத்தினர்
கலைத்திறமிகுத்தவ ருனைத்துதிவிருப்பினர்
பெருக்கிடையடுத்துனை மறப்பறநினைத்துய
வருட்செய்வாயே
இடிக்கொடியுயர்த்தடன் முகிற்பரிநடத்தரு.
மறைச்சதமகத்தின னளித்தமெனடைப்பிடி
யிணைக்குவிமுலைச்சுவ டுறத்தழுவணிப்புய
வரைச்சலாபா
விடைச்சியர்மனைப்பல வுறித்தயிர்களைக்கவர்
திருட்டரிசமர்க்கிடை தொலைத்ததி கிரிப்படை
யினைக்கயமுகத்தனை வதைத்துடனளித்தருள்
[செயப்பிரானே
வடிக்கணைதொடுத்தம ரியற்றுகனலிப்பகை
முடித்தலைபறுத்திடு விறற்புயர்தமக்கிரு
மலர்ப்பதநிழற்பதிகொடுத்தகருணைக்குக குறப்பெணுதா
வபற்சிறுறும்வளைக்குல முயிர்த்தொளிர்மணிக்குவை
களைத்தினமளத்தியர் மதுக்கொளவளக்குநல
வளப்பதிநிதிப்பதி பொழிற்சிவகிரிப்பதி
யயிற்கைவேளே (சு)

தானனத் தானத் . . . தனதான

காதார்கட் கோலத் தவர்பாலே
காமாதித் தாழ்வுற் றலையாதே
தீதாளர்க் கூடித் திரியாதே
சேயேனைக் காமெய்க் குமரேசா
வேதாளச் சூழற் படையோனே
வேகாரிப்பூசைக் குரு கானே
கூதாளத் தார்மொய்த் துயர்தோளா
கூடாரப்பாறைக் குகவேளே (எ)

தையத்தன தனதன்னன தனதான

வையச்சுக முகின்மின்னென வல்லுப்பக லுனையெண்ணி
வள்ளற்பத துதிபன்னிடு மடநாயேன் [நின்
மையற்கொரு விதையன்னவை தொல்லைக்கொரு கடல
வவ்வைப்புல மெனுமுன்னத பகையாலே [ன்னவை

வெய்யிற்படு புழுவென்னவு மையிற்படுமளியென்னவும்
வெவ்வித்துயர் பலநண்ணுற விடலாமோ
வெல்லற்கரு நமனண்ணுமு னெய்தற்கருநினதின்னருள்
வெள்ளத்திலொர் துளியின்னள வருள்வாயே

கையிட்டுறி யிடைவெண்ணெயை நெய்யைத்திரு டிய
கள்ளத்தனமுகில்வண்ணனின்மருகோனே[வெண்ணமில்
கல்விட்டெறிபவனும்மொரு தொல்லைக்கதிபெறமுன்ன
கல்விற்கர தலகண்ணுத லருள்பாலா [ருள்

தெய்வத்தலைமையவெண்ணகைவள்ளிக்கிசைபுயசண்முக
தெவ்வர்க்கிடி நிகர்மின்னயி லுடையோனே
செய்பிற்குட வளைகன்னல்கணெல்லுக்கதிர் பலதுன்னிய
செல்வச்சிவகிரி மன்னிய குகவேளே (அ)

தனதனதனனத் தனதான

உரையொடுசெனைப் புலன்வழி செலலற்
றெருநொடிமனதொற் றுமையோடே
யுனதிருபதுமக் கழல்களைநினைவுற்
றெழுகுவமெனவுற் றிடுபோதே

யரைநொடிநிலைநிற் கிறதிலை யெனினிற்
கடியவனெனவெப் பொழுதாவே
னடியவர்பாவச் சிகிமிசையெதிருற்
றருள்புரிகுவதற் கொருநாளோ

கரைபொருதிரைகத் தெழுகடல்சுவறக்
கதிரயில்விடுமுக் கிரகோவே
கனைகழலதிரத்திருநட மிடுபொற்
கமலசரணருத் தமபாலா

திரைநிகர்மயலைத் தெறுமவரிதயத்
திருமலருறைவுற் றெழுதேனே
திகழ்மணியளகைப் பதிநிகர் கனகச்
சிவகிரிநகரக் குகவேளே (கூ)

தானதனதந்ததன தனதான

சேல்விழிகளென்றுமுகம் வானமதியென்று மொழி
தேனமுதமென்றும்வளர் குழலோநீள்
சீதமுகிலென்றுமுலை வேண்மகுடமென்றுமிளிர்
தேகநிதியென்றுநித மடமானார்

மேன்மயன்மிகுந்தனவர் காலினும்விழுந்தணையின்
மேவியணையுஞ்சுகமெ யெனவேதுய்
மேலவர்பணிந்துயுநின் மாகழன்மறந்தலையும்
வீணனையுயும்படிசெய் தருள்வாயே

மான்மருககந்தமலி வாகியகடம்பணியும்
வாகுபனிரண்டுடைய குமரேசா
மாதவர்கள்சிந்தைமலர்மீது குடிகொண்டகுக
வாரணமுகன்றுணைவ வடிவேலா

பால்வளமுநன்செய்களோடேர்வளமுநந்துலவு
பார்வளமுமிஞ்சுசிவ கிரிவாழ்வே
பால்விடையர்நன்குபுனைதோளு டையர்திங்கள்பணி
பாணிபுனைநம்பனருள் குகவேளே (௰)

தானனத் தானன தனனத் தனதான

போதாரத் தூவிநினடியிற் பாவாரப்பாடியுனருளைப்
பூணுமைப்பாவியெனினுநற் றயையோடே
பூதாதிச்சீர்களுமயர்வுற் றுதாரப்பாலொருதுளியுட்
போகாமற்சோருயிருடல்விட் டகல்போதே

காதோர்கைச்சூலமு மொருகைப்பானீளப்பாசமுமிளிரக்
காய்மேதிப்பானமன்முனிவுற் றணுகாதே
கார்காலத்தாடல் செய்மயிலிற் றூனேறிச்சேவையதுதவிக்
காவாபொற்பாதகதியுமெற் கருள்வாயே

தூதோர்பொற்பாவையினிடமுற் பாளுளிற்போதருசரணத்
தூயோனைத்தாதையெனுமறைத் திருவாயா
சூதாடித்தோல்விகொடருமற் காதாரப்பாரதமுடியச்
சோராமற்போர்நட வரிசெப் பிசையோனே

கூதாளக்கானவர்மகளைக் காடேகித்தேடியணவலைக்
கூடாடமற்கூடியசுரதச் செயலோனே
கூர்வேலத்தாவிரிகமலப் பூமாதுற்றுள்சிவகிரியிற்
கூடாரப்பாறையில்வளர்மெய்க் குகவேளே (௰௧)

தனனதந்த தத்தத் தனந்தன தனதாள

அனையர்கொண்ட கெற்பத்திருந்தொரு
கணிததிங்கள் பத்திற்பிறந்தழு
தவனியின்க ணூற்றுத்தவழ்ந்துற விளையாடி

யரியவிஞ்சை கற்றுச்சிறந்துசெல்
வயதிரண்டு பத்துறறனங்கன
தமரின்மங்கை யர்க்கிச்சைகொண்டதி மயலாலே

மனதலைந்து கெட்டுத்தினம்பல
பலகழிந்து மெத்தத்தளர்ந்துடல்
வனமருந்த விக்கிச்சுழன்றெழு கபமேலே

வரவுலர்ந்து செத்துக்கிடந்துருள்
பிறவியென்ற தத்தைக்கடிந்துநின்
வனசமென்ப தத்திற்பொருந்திட வருள்வாயே

சனகனனற ளிக்கத்தகுந்திட
சிலைமுறிந்தெ டுத்துவகிறங்கொடு
சடசடென்றொடித்திட்ட கொண்டலின் மருகோனே
தவளபங்க யத்துற்றிருந்தவள்
கணவன்மண்டை யிற்பொற்கரங்கொடு
தடபடென்று குட்டிச்சினந்தருள் குருநாதா
கினரநன்கு தத்தைக்கிணங்கிய
மொழிதருங்கு றத்திக்குமுன்பொரு
கிழவனென்று ருப்பெற்றடைந்தனை நகையோனே
கிரகமெங்கு முத்தப்பெ லங்குவை
நிறைகளஞ்சி யப்பொற்புறுஞ்சிவ
கிரியினின்று பத்தர்க்குவந்தருள் குகவேளே (௰௨)



வேலுமயிலுந்துணை



# வாழ்த்து.

கார்வாழ்க கோவின் கணம்வாழ்க நான்மறையின்
சீர்வாழ்க நேயர் திரள்வாழ்க பார்வாழ்க
சேவன் மயில்வாழ்க செவ்வேலன் றாள்வாழ்க
காவலவன் செங்கோல்வாழ்க

## முற்றிற்று